2

# ॥ स्तोत्रमाला ॥

PM-N

ஸ்தோத்ரமாலை



व्याख्याता प्रकाशकश्च

स्वामी प्रकाशानन्द सरस्वती ॥

# ஸ்தோத்ரமாலா

பு.ம.நா. P.M.N



உரை எழுதி வெளியிட்டவர்

ஸ்வாமி பிரகாசாநந்த ஸரஸ்வதி.



விலை நல் உபயோகம்.

# முன்னுரை

---

அன்பர்களே! இம்மானவலோகத்தில் பிறவி பெற்று பற்பல வியவஹாரங்களில் ஈடுபட்டிருக்கும் நமக்கு அதற்குரிய ஞானசக்தியும் கிரியா சக்தியும் அளிக்க இறைவனடி வணங்கி வேண்டிக்கொள்வது அவசியமே. அதன் பொருட்டு வேதமோதிப் பொருளறிந்தப் பெரியோர்களால் இயற்றப்பெற்ற அரும் பெரும் தோத்திரங்களில் பொருளறிந்து மனமுருகிப் பாடப்படுமானால் உடனே பயனளிக்கும் ஒரு தனித் திறமையுண்டு. அதின் வண்ணம் எனது குருமூர்த்தியான சுரோத்திரிய பிரம்மநிஷ்ட ஸ்ரீ பிரபோதானந்த சரஸ்வதி ஸ்வாமிகளின் உத்தரவின்படி சில முக்யமான தோத்திரங்களையும் வைதிக சாந்திபாடங்களையுமெடுத்து பொழிப்புரை எழுதி வெளியிட்டுள்ளேன். அன்பர்களனைவரும் ஒருநாள் ஒரு முறையாவது இத்தோத்திரம் பாடித் திருவருள் பெற்று இகபர சுகங்களையடைவீர்களாக.

இங்ஙனம்,

ஸ்வாமி பிரகாசானந்த ஸரஸ்வதி.

# ॥ स्तोत्रमाला ॥



## प्रातस्स्मरणस्तोत्रम् ॥

प्रातःस्मरामि हृदि संस्फुरदात्मतत्वं
सच्चित्सुखं परमहंसगतिं तुरीयम् ।
यत्स्वप्नजागरसुषुप्तमवैति नित्यं
तद् ब्रह्म निश्चलमहं न च भूतसंघः ॥ १ ॥

சரமும் அசரமுமான எல்லா பூதப் பிராணிகளுடைய இதயத்திலும் சத் சித் ஆனந்தவடிவமாக விளங்குவதும், பிரம்ம நிஷ்டையும் விரக்தியுமுள்ள பரமஹம்ஸ ஸன்யாஸிகளுடைய பரமகதியுமான துரீய சேதன ஆன்ம தத்வத்தை நான் மேலான சிரத்தா பக்திகளுடன் விடியற்காலத்தில் நினைக்கின்றேன். கனவு நனவு, துயில் என்னும் மூன்றவஸ்தைகளையுமறிவதும், விகாரமற்றதும், நித்யமும், நிரவயவமுமான பிரம்மம் யாதோ அதுவே யான். ஆகாயம் முதலிய ஐம்பூதங்களுடைய அற்பச் சமுதாய வடிவமான சரீரம் யானல்ல.

प्रातर्भजामि मनसो वचसामगम्यं
वाचो विभान्ति निखिला यदनुग्रहेण ।
यन्नेति नेति वचनैर्निगमा अवोचु-
स्तं देवदेवमजमच्युतमाहुरग्र्यम् ॥ २ ॥

மனதிற்கும் வாக்கிற்கும் விளக்கமுடியாததும், மனதையும் வாக்கையும் விளக்குவதும் யாதோ அந்த சுயம்பிரகாசமான ஆன்ம தத்வத்தை யான் வெடியற்காலத்தில் பஜனை செய்கின்றேன். எந்த ஸர்வாதிஷ்டான தத்வத்தை இருக்கு முதலிய வேதங்கள் 'ஈதன்று ஈதன்று' என்னும் தடற்மொழியால் எல்லாப் பிரபஞ்சத்தையும் தள்ளி மிஞ்சின வடிவமாக உபதேசிக்கின்றனவோ அந்த தத்வத்தை ஞானிகள் பிறப்புமிறப்புமற்ற எல்லாவற்றிற்கும் மேலான தேவ தேவனென்று கூறுகிறார்கள். அதை நான் பஜனை செய்கிறேன்.

प्रातर्नमामि तमसः परमर्कवर्णं
पूर्णं सनातनपदं पुरुषोत्तमाख्यम् ।
यस्मिन्निदं जगदशेषमशेषमूर्तौ
रज्ज्वां भुजंगम इव प्रतिभासितं वै ॥ ३ ॥

எல்லாவற்றின் வேறல்லாததும் சர்வாதிஷ்டானமுமான அந்த தத்வத்தில் இந்தச் சராசர வடிவமான உலகம் தாம்பில் பாம்பு போன்று மித்யையாகக் கற்பிக்கப்பெற்று தோன்றுகிறதோ அந்த மாயா வடிவமான இருட்டிற்கப்பால் பட்டதும், ஆதித்யனைப் போன்று சோதிவடிவமானதும், எல்லாவற்றையும் விளக்குவதுமான புருஷோத்தமனெனப்படும் சனாதன பதத்தை யான் வெடியற்காலத்தில் நமஸ்காரம் செய்கின்றேன்.

श्लोकत्रयमिदं पुण्यं लोकत्रयविभूषणम् ।
प्रातःकाले पठेद्यस्तु स गच्छेत् परमं पदम् ॥
आदिशंकराचार्यपादाः

மூவுலகங்களுக்கும் அலங்காரமான இம்மூன்று பாடல்களையும் எவனொருவன் பொருளறிந்து வெடியற்காலத்தில் பாடுவானோ அவன் பரமபதத்தை அடைவானென்பது நிச்சயம்.

## नारायणाष्टकम् ॥

नारायणमूर्ते निगमाराधितकीर्ते ।
नारायणमूर्ते परमेशान नमस्ते ॥

மறைகளால் புகழப்பெற்ற மேலான ஈசனே
நாராயணமூர்த்தியே தேவரீருக்கு நமஸ்காரம்.

श्रीवल्लभ संसारमहासागरमग्नं
नावा कृपया मां पर संतारय दीनम् ।
जाने न विना त्वां परतत्त्वं श्रुतिगम्यं
भवजन्मस्थितिभङ्गाश्च भवन्तीश भवत्तः ॥

முக்குணங்கட்கு அப்பாற் பட்டிருப்பவ
ரேனும் ஸ்ரீயெனும் மாயையோடும் கூடின
வரான தேவரீர் பிறப்பிறப்பாகிய பெருங்
கடலில் மூழ்கி வருந்தும் என்னை திருவருளா
கும் தோணியால் கரையேற்ற வேண்டும்.
ஈசனே இப்பிரபஞ்சத்தின் உற்பத்தி ஸ்திதி
இலயங்கள் தேவரீரிடமிருந்து உண்டாகின்ற
படியால் வேதமோதி யறிந்தடையக் கூடிய பர
தத்வம் தேவரீரை யல்லாமல் வேறொன்
றறியேன்.

न हि माता न पिता मे नहि जाया न सुतो वा
न बलं वा न कुलं वा न सुहृद्वा न च बन्धुः ।
न हि विद्या न धनं वा न किमप्यस्त्यखिलात्मन्
भवदन्यं भवसंतारक नारायणमूर्ते ॥ ३ ॥

சம்சாரத்தினின்று கரையேற்றும் எல்லா வடிவமான நாராயண மூர்த்தியே, எனக்குத் தாயும் தந்தையும் மனைவியும் மகனும் வன்மையும் குலமும் தோழனும் பந்துவும் கல்வியும் செல்வமும் தேவரீரல்லால் வேறொன்றுமில்லை.

आकर्षयतीशान मनो मां निरयं प्रत्या-
हा बहुरोगा मम देहं च दहन्ति ।
संजीवनमाहा परहस्तस्थितमास्ते
मा मां त्यज लोकेश्वर नारायणमूर्ते ॥ ४ ॥

ஈசனே, கெட்டமனம் என்னை நரகத்திற்கு இழுக்கின்றது. ஐய்யோ பல நோய்கள் என்னுடலையும் எரிக்கின்றன. ஓகோ என் பிழைப்போ அயலார் கையிலிருக்கிறதே. ஆகையால் உலகத்திற்கு ஈசனான நாராயண மூர்த்தியே என்னைத் தேவரீர் கைவிடக் கூடாது.

दीनावनमेकं व्रतमाधाय परोऽपि
प्रादुर्भवसीश प्रभुरेकस्त्वमनेकः ।
नैकोऽपि विपेदे भवदीयः किल तस्मा-
द्देहीश्वरभक्तिं मम नारायणमूर्ते ॥ ५ ॥

ஈசனே, முக்குணங்களுக்கப்பால்ப் பட்ட பரனும் ஏகனும் எல்லாம் வல்லவனும் இருக்கும் தேவரீர் துக்கிகளைக் காப்பாற்றுவ தென்ற ஒரே விரதத்தைக் கைக்கொண்டு அனேக வடிவமாகத் தோன்றுகிறீர் தேவரீ ரன்பனான எவனொருவனும் ஆபத்தை யடைந் தில்லையாதலின் நாராயணமூர்த்தியே எனக்கு தேவரீரன்பைத் தந்தருள்வீராக.

इच्छाकरणेनाखिलमुद्भावयिता यो
गोप्ता परिहन्ताखिलशक्तो महिमस्थः ।
तस्यैव कियांस्ते मम तापौघविनाशः
सर्वात्मक सर्वेश्वर नारायणमूर्ते ॥ ६ ॥

எல்லா வடிவினராயும் எல்லாவற்றிற்கும் தலைவராயும் இருக்கும் மேன்மையுடைய நாரா யணமூர்த்தியே நினைப்பு மாத்திரக் கருவியால் பல்விதமாய்க் காணப்படும் இப் பிரபஞ்சத்தை ஆக்கி அளித்து அழிக்கும் ஆற்றலுடைய தேவ ரீருக்கு எனது துக்கத்தை யழிப்பது எம்மாத் திரம். ஆனலற்பமேயாம்.

एके निजसंकल्पसमानैस्तव सत्वं
निश्चेतुमनर्हा यतमानाश्च निराशाः ।

शून्यं कथयन्तीश्च निपीयाऽपि पयस्ते
सर्पिस्समुग्धा ननु नारायणमूर्ते ॥ ७ ॥

ஓ ஈசனான நாராயணமூர்த்தியே, சில தகுதியற்றவர்கள் தங்களால் கற்பிக்கப் பெற்ற பிரமாணங்களாலே தேவரீரின் தத்துவத்தை நிச்சயிக்க முயன்று எட்டாமையால் சூன்யமென்று சொல்லுகிறார்கள். அட பாவமே அவர்கள் நிறையப் பால் குடித்தும் நெய்ச்சுவையை அறியாதவர்களே யாவார்கள்.

धन्यः श्रुतिगम्यं बहुभक्त्या च विदित्वा
स्वात्मानमुपास्ते तु भवन्तं शुभचित्तः ।
धन्यं समचित्तं बहुमन्ये तममोघं
संसारदरापारय नारायणमूर्ते ॥ ८ ॥

ஓ நாராயண மூர்த்தியே, தூய மனமுடைய எவனோ ஒரு மகான் வேதமொழி யறியத் தக்க தேவரீரைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் இவைகளால் தன் சொரூபமாக வறிந்து பாவிக்கின்றான். தன்யனும் சமசித்தனும் பிறவிப் பயன் பெற்றவனுமான அம் மகானை நான் போற்றுகின்றேன். என்னைத் தேவரீர் சம்ஸார பயத்தினின்றும் காப்பாற்றுவீராக.

नारायणमूर्ते निगमाराधितकीर्ते ।
नारायणमूर्ते परमेशान नमस्ते ॥

स्वामी प्रबोधानन्दसरस्वती

## पञ्चश्लोकी ॥

त्वमक्षरं परमं वेदितव्यं
त्वमस्य विश्वस्य परं निधानम् ।
त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता
सनातनस्त्वं पुरुषो मतो मे ॥ १ ॥

முமுட்சுக்களாலறியத்தக்க பரப்பிரம்மம் தேவரீரே. இக்காணப்படும் பிரபஞ்சத்திற்கு ஆதாரமுமாகின்றீர். அக்காரணத்தால் தேவரீர் அழிவற்ற நித்தியமான தருமத்தைக் காக்கின்றவருமாகின்றீர். ஸநாதனனான பரமபுருஷனும் தேவரீர் என்பதே என் நிச்சயம்.

त्वमादिदेवः पुरुषः पुराण-
स्त्वमस्य विश्वस्य परं निधानम् ।
वेत्तासि वेद्यं च परं च धाम
त्वया ततं विश्वमनन्तरूप ॥ २ ॥

ஓ அனந்த வடிவமுடையவரே! தேவரீர் தேவர்கட்காதியாகியவரும் இப்பிரபஞ்சத்திற்கு லயஸ்தானமுமாகின்றீர். அவ்வாறே இப்பிரபஞ்சத்தை யறிபவரும் அறியத்தக்க வஸ்துவும் உத்தமமான வைஷ்ணவ பதமும் தேவரீர்தான். தேவரீரால் இப் பிரபஞ்சம் முழுவதும் வியாபிக்கப் பெற்றிருக்கின்றது. இவ் வேழு காரணங்களினாலும் தேவரீரே வழிபடத் தக்கவரென்பது பொருள்.

वायुर्यमोऽग्निर्वरुणः शशाङ्कः
प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।
नमो नमस्तेऽस्तु सहस्रकृत्वः
पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥ ३ ॥

வாயுவும் யமனும் அக்னியும் வருணனும் சந்திரனும் நான்முகப் பிரம்மனும் அன்னாரின் தந்தையும் தேவரீரே. அப்பேர்பட்ட தேவரீருக்கு நமஸ்காரம். மீண்டும் மீண்டும் நமஸ்காரம், நமஸ்காரம்.

नमः पुरस्तादथ पृष्ठतस्ते
नमोऽस्तु ते सर्वत एव सर्व ।

अनन्तवीर्यामितविक्रमस्त्वं
सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥ ४ ॥

ஓ ஸர்வான்மாவான ஈசனே தேவரீருக்கு முன்பாலும் பின்பாலும் நமஸ்காரம். அவ்வாறே எல்லாத் திசைகளிலும் நமஸ்காரம். அளவற்ற ஆற்றலும் பராக்கிரமமும் உள்ள தேவரீர எல்லாவற்றையும் வியாபித்திருப்பவராதலால் ஸர்வஸொரூபராகின்றீர்.

पितासि लोकस्य चराचरस्य
त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।
न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो
लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥ ५ ॥

ஓ ஒப்பற்ற மகிமையுடையவரே தேவரீர் இயங்குவதும் இயங்காததுமான இப்பிரபஞ்சத்தின் பிதாவாகின்றீர். ஆதலால் வழிபடத் தக்கவரும் குருவும் குருவை விட மேலானவருமாகின்றீர். மூவுலகங்களிலும் தேவரீருக்கு சமானமானவன் ஒருவனுமில்லை யெனவே மேலான வேறொருவனெங்கே. ஒருவனுமில்லையெனப் பொருள்.

त्वमेव माता च पिता त्वमेव
त्वमेव बन्धुश्च सखा त्वमेव ।
त्वमेव विद्या द्रविणं त्वमेव
त्वमेव सर्वं मम देवदेव ॥

ஓ தேவ தேவ! எனக்கு தாயும் நீயே, தந்தையும் நீயே, பந்துவும் நீயே, தோழனும் நீயே, கல்வியும் நீயே, செல்வமும் நீயே, எல்லாம் நீயே.

## वैदिकशान्तिपाठाः ॥

१. हरिः ॐ शं नो मित्रः शं वरुणः । शं नो भवत्वर्यमा । शं न इन्द्रो बृहस्पतिः । शं नो विष्णुरुरुक्रमः । नमो ब्रह्मणे । नमस्ते वायो । त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि । त्वामेव प्रत्यक्षं ब्रह्म वदिष्यामि। ऋतं वदिष्यामि । सत्यं वदिष्यामि । तन्मामवतु । तद्वक्तारमवतु । अवतु माम् । अवतु वक्तारम् ॥ ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

कृष्णयजुर्वेद— तैत्ति० १-१-१

மித்ரன் (பகலபிமானி தேவதையான சூரிய பகவான்) எங்களுக்கு சுகத்தை யளிப்பாராக.

வருணன் (இரவபிமானி தேவதை யல்லது ஜலத்தினுடைய அதிஷ்டான தேவதை) எங்களுக்கு சைத்தை யளிப்பாராக. அர்யமா (பிதிர்களுடைய அதிஷ்டான தேவதை) எங்களுக்குச் சுகமளிப்பாராக. இந்திரன் (கைக்கும் பலத்திற்கும் தேவதையான தேவராஜன்) எங்களுக்குச் சுகமளிப்பாராக. ப்ருகஸ்பதி (வாக்கிற்கும், புத்திக்கும் தேவதை) எங்களுக்குச் சுகம் கொடுப்பாராக. விரிந்த பாதமுடைய விஷ்ணு பகவான் எங்களுக்கின்ப மாற்றுவாராக. வியாபகமான பிரமத்திற்கு நமஸ்காரம். ஓ வாயுவே உனக்கு நமஸ்காரம். நீயே ப்ரத்யக்ஷ பிரமம். உன்னையே ப்ரத்யக்ஷமான பிரமமென்று கூறுவேன். யதார்த்தம் சொல்வேன். சத்தியம் சொல்வேன். அந்தப் பிரம்மம் என்னைக் காப்பாற்றுவதாகுக. வேதத்தைக் கற்பிக்கும் குருவைக் காப்பாற்றுவதாகுக. என்னைக் காப்பாற்றுவதாகுக. குருவைக் காப்பாற்றுவதாகுக. ஆத்யாத்மிக, ஆதிபௌதிக, ஆதிதெய்விகமென்னும் மூன்றுவித துக்கங்களுக்கும் நிவர்த்தி யுண்டாகுக.

२. हरिः ॐ सह नाववतु । सह नौ भुनक्तु ।

सह वीर्यं करवावहै । तेजस्विनावधीतमस्तु मा विद्विषावहै । ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

कृष्ण-यजुर्वेद-तैत्ति० २-१-१

அந்த ப்ரஸித்தரான பரமேஸ்வரன் குருமாணாக்கரான எங்களிருவர்களையும் காப்பாற்றுவாராக. அந்த ப்ரஸித்தரான பரமேஸ்வரன் எங்களிருவரையும் வித்தையின் பயனை யுண்பிப்பாராக. நாங்கள் இருவரும் வித்தையை அடைவதில் ஆற்றலடைவோமாக. எங்களிருவருடைய படிப்பும் ஒளியுடையதாகுக. நாங்களிருவரும் ஒருவருக்கொருவர் த்வேஷம் செய்யாதிருப்போமாக.

மூவித சாந்தியும் முன்போலவே.

३. हरिः ॐ यश्छन्दसामृषभो विश्वरूपः । छन्दोभ्योऽध्यमृतात्संबभूव । स मेन्द्रो मेधया स्पृणोतु । अमृतस्य देव धारणो भूयासं । शरीरं मे विचर्षणम् । जिह्वा मे मधुमत्तमा । कर्णाभ्यां भूरि विश्रुवम् । ब्रह्मणः कोशोऽसि मेधयापिहितः । श्रुतं मे गोपाय ॥ ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

कृष्ण-यजु०

வேதச் சந்தஸ்ஸுகளுக்கு தலைவரானவரும், எல்லா வடிவராயிருப்பவரும், அமிர்த ரூபமான வேதங்களை விட மேன்பட்டவரும் ஓங்கார ரூபருமான இந்திரபகவான், எங்களுக்கு அழுக்கற்றதும், திட்பமும், ஏகாக்கிரமுமான புத்தியைத் தந்தருள்வாராக. ஓ தேவா யான் அமிர்த ரூப ப்ரம்மத்தை தரிப்பவனாவேனாக, என்னுடல் நோயற்றதும், தன்வயப்பட்டதுமாவதாகுக, என் நாக்கு மிகவும் இன்சொல்லுடையதாகுக. நான் காதுகளாலே நல்லதை மிகக் கேட்பேனாக. ஓங்காரமே நீ பிரம்மத்தின் கோசமாயிருக்கின்றாய். உனதாராதனையாலே பிரம்மம் விளங்குகின்றது. அதனால் உன்னுள்ளில் பிரம்மம் மறைந்திருக்கிறது. உலக புத்தியினாலே நீ மறைந்திருக்கிறாய். நான் சிரவணம் செய்ததைக் காப்பாற்றுவாயாக.

முன்போலவே மூவித சாந்தி.

४. हरि ॐ अहं वृक्षस्य रेरिवा । कीर्तिः पृष्ठं गिरेरिव । ऊर्ध्वपवित्रो वाजिनीव स्वमृतमस्मि । द्रविणं सवर्चसं । सुमेधा अमृतोक्षितः । इति त्रिशङ्कोर्वेदानुवचनम् ॥ ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥ कृष्ण यजु-तैत्ति० १·१०-२

நான் சம்சாரமாகும் விருக்ஷத்தை வெட்டி மாய்ப்பவன். எனது மகிமை மலையுச்சி போல் மிகவுயர்ந்தது. நான் ஆதித்யனைப் போன்று முற்றிலும் மாசற்றவனும், அமிர்தவடிவனும், ஒளிபொருந்திய வன்மை வடிவனும் நல்ல புத்தியுடையவனும், அமிர்தவடிவனும், அழிவற்றவனுமாக விருக்கிறேன். இச்சொல் வேத மோதி நன்கறிந்த பிறகு த்ரிசங்குவினால் சொல்லப்பட்டது. ஓம்.

முன்போலவே மூவித சாந்தி.

५. हरिः ॐ पूर्णमदः पूर्णमिदं पूर्णात् पूर्ण-
मुदच्यते । पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते ॥
ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

शुक्ल यजुर्वेद ईश० बृहदारण्यक

அதுவும் (பிரமம்) பூர்ணம் இதுவும் (ஜீவப்ரபஞ்சம்) பூர்ணம். பூரணத்தினின்று பூரணமே யுண்டாகின்றது. பூரணத்தினுடைய பூரணத்தைப் பற்றிக் கொண்டு பூரணமே மிஞ்சுகிறது.

முன்போலவே மூவித சாந்தி.

६. हरिः ॐ आप्यायन्तु ममाङ्गानि वाक्

प्राणश्चक्षुः श्रोत्रमथो बलमिन्द्रियाणि च । सर्वाणि सर्वं ब्रह्मोपनिषदं माहं ब्रह्म निराकुर्यां मा मा ब्रह्म निराकरोदनिराकरणमस्तु अनिराकरणं मे अस्तु । तदात्मनि निरते य उपनिषत्सु धर्मास्ते मयि सन्तु ते मयि सन्तु । ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

सामवेद केन छान्दोग्यम

என்னங்கங்களும், வாக்கும், ப்ராணனும், கண்ணும், காதும், வலுவும், இந்திரியங்களும், வளர்ச்சி யடையட்டும். இவையனைத்தும் பிரம்ம வடிவமான உபநிடதமே. நான் பிரம்மத்தை நிராகரிக்க மாட்டேன். அதாவது, பிரம்மத்தின் வெளிமுகமாகேன், பிரமம் என்னை அனாதரவு செய்யலாகாது. அதாவது எங்களிருவருக்கும் மிகத் தூய பேரன்புளவாகுக. பிரம்மான்மாக்களில் இடை ஈடின்றி பேரன்பைச் செய்யும் பெரியோர்களிலும், உபநிடதங்களிலும் பிரசித்தங்களான சமம் தமம் முதலிய தருமங்கள் என்னிடம் உண்டாவதாகுக. ஓம்.

முன்போலவே மூவித சாந்தி.

७. हरिः ॐ वाङ् मे मनसि प्रतिष्ठिता, मनो मे

वाचि प्रतिष्ठितमाविरावीर्म एधि । वेदस्य म आणीस्थः श्रुतं मे मा प्रहासीरनेनाधीतेनाहोरात्रान् संदधाम्यृतं वदिष्यामि । सत्यं वदिष्यामि तन्मामवतु । तद्वक्तारमवतु । अवतु मां । अवतु वक्तारमवतुवक्तारम् ॥ ७ ॥ ॐ शान्तिः शान्तिः शान्तिः

ऋग्वेद-ऐतरेयम्

என் வாக்கு மனதில் நிலை பெறுக, என் மனம் வாக்கில் நிலை பெறுக, ஓ சுயம் ப்ரகாச வடிவமான பிரம்ம சைதன்யமே நீ அவித்தையை நீக்கும் பொருட்டு என்னில் விளங்கவேண்டும். வேதத்தினுண்மைப் பொருளை எனக்களிக்குக. நான் சிரவணஞ் செய்தது என்னை விட்டு நீங்கக் கூடாது. படிக்கப்பட்ட இதை அல்லும் பகலும் நான் தரிப்பேனாக, நான் பாரமார்த்திகத்திலும், சத்தியம் சொல்வேனாக. விவகாரத்திலும் சத்யம் சொல்வேனாக. அந்த ப்ரம்மம் என்னைக் காப்பாற்றுவதாகுக! அந்த ப்ரம்மம் குருவைக் காப்பாற்றுவதாகுக. என்னைக் காப்பாற்றுவதாகுக. குருவைக் காப்பாற்றுவதாகுக. குருவைக் காப்பாற்றுவதாகுக. ஓம்

முன்போல மூவித சாந்தி.

८. हरिः ॐ भद्रं नो अपिवातय मनः ॥
ॐ शान्तिः शान्तिः शान्तिः

எங்கட்கு மங்கள முண்டாகுக. மனத்தைத் தூயதாக்குக. ஓம்.

முன்போல மூவித சாந்தி.

९. हरिः ॐ भद्रं कर्णेभिः शृणुयाम देवा भद्रं पश्येमाक्षभिर्यजत्राः । स्थिरैरङ्गैस्तुष्टुवांसस्तनूभि-र्व्यशेम देवहितं यदायुः । स्वस्ति न इन्द्रो वृद्ध-श्रवाः । स्वस्ति नः पूषा विश्ववेदाः । स्वस्ति नस्ता-र्क्ष्यो अरिष्टनेमिः । स्वस्ति नो बृहस्पतिर्दधातु ॥
ॐ शान्तिः शान्तिः शान्तिः ॥

अथर्वण-प्रश्न ॥

ஓ தேவர்களே, நாங்கள் காதுகளாலே மங்களச் சொற்களைக் கேட்போமாக, இயஜனம் செய்யும் நாங்கள் கண்களாலே மங்களவடிவங்களைக் காண்போமாக, நாங்கள் திடமான கை, கால், முதலிய அவயவங்கள் வாயலாக, திட்பமான பொருள் கொண்ட மறைகளாலேஅப் பரப்ரம்ம பரமான்மாவின் துதியைச் செய்வோமாக. ஓ தேவர்களே எங்கள் வாழ்நாள் முழுவதும்

மங்கள வடிவமான சிவனையே தரிப்போமாக. எல்லா வுலகையுமறிந்த வாதித்யன் எங்களுக்கு ஆனந்தத்தைத் தந்தருள்வாராக.

முன்போல் மூவித சாந்தி,

१०. हरिः ॐ यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै । तं ह देवमात्मबुद्धिप्रकाशं मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये ॥

यजुर्वेद-श्वेताश्वतर १०-६-१८

எந்தப் பரபிரம்ம பரமான்மா முன்காலத்திலே முதன்முதலாக வுடலெடுத்த பிரம்மதேவனைத் தரித்துக்கொண்டிருக்கிறாரோ. அப்பிரமன் பொருட்டு இருக்கு முதலிய வேதங்களை விளக்குகின்றாரோ அவ்வான்ம புத்தியை விளக்கும் புகழ்பெற்ற தேவனை முமுட்சுவான யான் அடைக்கலம் புகுகின்றேன்.

முன்போல மூவித சாந்தி.

வைதிக சாந்தி பாடம் முற்றிற்று.

---

## पुष्पार्चनमन्त्राः ॥

यज्ञेन यज्ञमयजन्त देवास्तानि धर्माणि प्रथमान्यासन् ते ह नाकं महिमानः सजन्त यत्र पूर्वे साध्याः सन्ति देवाः ॥

தேவர்கள் விஷ்ணுவுடன் யாகத்தைச்செய்தார்கள். அந்த தர்மங்கள் உலகத்தில் புகழ்பெற்றன. அவ்வாறு யாகம் செய்தவர்கள் முன் தேவர்களும் சாத்யர்களுமிருக்கும் ஸ்வர்கலோகத்தில் பெரும் பதவியைப்பெற்றனர்.

राजाधिराजाय प्रसह्य साहिने नमो वयं वैश्रवणाय कुर्महे । स मे कामान् कामकामाय मह्यं कामेश्वरो वैश्रवणो दधातु । कुबेराय वैश्रवणाय महाराजाय नमः ॥

யக்ஷர்கட்கு ராஜனும் பராக்ரமசாலியுமான வைச்சிரவணனுக்கு நாங்கள் நமஸ்காரம் செய்கிறோம். அவ் வைச்சிரவணன் எல்லாவித வைசுவரியங்களுக்கும் ஈசுவரரான அவ்வைச்சிரவணன் இக பர சுகங்களையும் மோட்சத்தையும் விரும்பும் எங்களுடைய அபிலாஷங்களைப் பூர்த்தி செய்வாராக. விச்ரவஸ்ஸினுடைய

புத்திரரும் ஐசுவர்யத்தினுடைய அதிபருமான குபேரருக்கு நமஸ்காரம்.

विश्वतश्चक्षुरुत विश्वतोमुखो विश्वतोबाहुरुत विश्वतस्पात् । सं बाहुभ्यां धमति संपतत्रैर्द्यावाभूमी जनयन् देव एकः ॥

எல்லாவிடத்திலும் வியாபித்த கண்களும் முகங்களும் கைகளும் கால்களுமுடைய ஒரே தேவன் இவ்வாகாசத்தையும் பூமியையும் சிருஷ்டித்து ரக்ஷித்து அழித்துக்கொள்ளுகிறார்.

नानासुगन्धपुष्पाणि यथाकालोद्भवानि च । भक्त्या मया प्रदत्तानि गृहाण परमेश्वर ॥

ஓ பரமேசுவரா தகுந்த காலத்தில் விரிந்திருக்கும் நன் மணம் கமிழும் பூக்களை நான் பக்தியுடன் அர்ப்பணம் செய்கின்றேன். தேவரீர் அதை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

समाप्तेयं स्तोत्रमाला ॥

இத்தோத்திரமாலை முற்றிற்று.



S. V. V. Press, Srirangam.—P.I.C. No. Ty. 62 C. 250. 14—1—46

